# TAMIL'S PAGE தேடிப்பார் Thedipaar.com




## கடுமையான புதிய நடைமுறைகள் 2019ல் புது மாற்றம் காணப்போகும் ஒன்ராறியோ.!



ஒன்ராறியோ மாகாண அரசு விதிமுறைகளுக்கு முரணாக வாகனத்தைச் செலுத்திச் செல்வோருக்கு எதிரான கடுமையான புதிய நடைமுறைகளை கொண்டுவந்துள்ளது. -3-ம் பக்கம் தொடர்ச்சி...

## தேசியத் தலைவர் வே பிரபாகரனின் புகைப்படத்தோடு தவறான தலைப்பிட்ட யாழ். பத்திரிக்கை!!!




தமிழீழ விடுதலைப்புலிகள் அமைப்பின் தலைவரின் புகைப்படத்துடன் பொருத்தமற்ற தலைப்புடன் வார பத்திரிக்கையில் வெளியான செய்தியால் குறித்த பத்திரிகையை பருத்தித்துறை இளைஞர்கள் எரித்து தமது எதிர்ப்பை வெளியிட்டுள்ளனர். -6-ம் பக்கம் தொடர்ச்சி...



Thedipaar.com
அனைவருக்கும் எமது
இனிய பொங்கல்
நல்வாழ்த்துக்கள்
2019

## கனடாவில் உயிர்களைப் பலி வாங்கும் நன்கொடைப் பெட்டிகள்..!

கனடாவில் துணிகளைப் போடும் நன்கொடைப் பெட்டியில் ஒரு பெண் சிக்கி மரணமடைந்தார். கனடாவில் இத்தகைய மரணம் நேர்ந்தது இது முதல்முறை அல்ல. நன்கொடைப் பெட்டிகளில் உள்ள பொருட்களை யாரும் திருடாமலிருக்க அவற்றில் பற்களைப் போன்ற கூரிய பகுதிகள் அமைக்கப்பட்டுள்ளன. பொருட்களைத் திருட முயற்சி செய்பவர்கள் மட்டுமல்லாமல் அவற்றை நன்கொடையாக வழங்க முயற்சி செய்பவர்களும் அவற்றில் சிக்கிக்கொள்கிறார்கள்.2015இலிருந்து அவ்வாறு 7 கனடியர்கள் மாண்டதாக The Canadian Press தெரிவித்தது. பெட்டிகளை அகற்றுமாறு சில நகரங்களும் இலாப நோக்கமற்ற அமைப்புகளும்கேட்டுக்கொண்டுள்ளன பெட்டிகளின பாதுகாப்புக் குறித்து விசாரணை நடத்தப்படும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

Thedipaar.com
தேடிப்பார்.கொம்

## எமதினிய வாசகர்களுக்கு..

இவ்வாண்டு(2019) முதல் தேடிப்பாரின் புதியதோர் வடிவமாக தேடிப்பார் செய்தித்தாள் மாதமொருமுறை உங்களை சந்திக்க வருகிறது. குறைகள் இருப்பின் சுட்டிக்காட்டி மன்னித்துக்கொள்ளுமாறு வேண்டுகிறோம். மற்றும் இங்கு பிரசுரமாகும் அனைத்து விளம்பரங்களுக்கும் விளம்பரதாரர்களே பொறுப்பு. தங்கள் ஆக்கங்களும் கட்டுரைகளும் இச்செய்திதாளில் பிரசுரிப்பதாயின் தயவு செய்து தொடர்புகொள்ளவும்.

416-244-8818
416-635-0635
info@thedipaar.com
www.thedipaar.com
2761 Markham Rd #C26
Scarborough ON
M1x 1M4

## கடுமையான புதிய நடைமுறைகள்...

1-ம் பக்கம் தொடர்ச்சி....

இந்த புதிய விதிமுறைகளின் அடிப்படையில், தவறு செய்யும் சாரதிகள் மீதான தண்டப் பணம் அதிகரிக்கப்படுவதுடன், சாரதி அனுமதிப் பத்திரமும் பறிமுதல் செய்யப்படக்கூடும் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது. வாகனத்தை விதிமுறைகளுக்கு மாறாக, கவனச் சிதறலுடன் செலுத்திச் சென்று முதன்முறையாக அகப்படும் ஒருவருக்கு, 1000 டொலர்கள் வரையில் தண்டம் விதிக்கப்படக்கூடும் என்பதுடன், அவரது சாரதி அனுமதிப் பத்திரம் 3 நாட்களுக்கு தடை செய்யப்படும் எனவும், அனுமதிப்பத்திர புதுப்பிப்புக்கான புள்ளிகளில் 3 குறைக்கப்படும் என்றும் தெரிவிக்கப்படுகிறது. இரண்டாவது முறையாகவும் பிடிபடுவோர், 2000 டொலர்கள் வரையில் அபராதத்தை செலுத்த வேண்டியிருக்கும் என்பதுடன், 7 நாட்களுக்கு அனுமதிப்பத்திரம் தடை செய்யப்படும் எனவும், மேலும் 3 புள்ளிகள் குறைக்கப்படும் என்றும் கூறப்படுகிறது. அதற்கு பின்னரும் இந்த குற்றச் செயல் தொடர்பில் பிடிபடுவோரின் சாரதி அனுமதி பத்திரம் ஒரு மாதத்திற்கு தடை செய்யப்படும் என்பதுடன், மேலும் 3 புள்ளிகள் குறைக்கப்பட்டு, 3,000 டொலர்கள் வரையில் அபராதம் விதிக்கப்படும்.இவ்வாறான கடுமையான தண்டனைகள் மூலம், சாரதிகள் வாகனங்களைச் செலுத்திச் செல்லும்போது, தமது கவனத்தை வேறு விடயங்களில் செலுத்தாது, வீதியிலேயே அதிக கவனத்தைச் செலுத்தி பாதுகாப்பாக வாகனத்தைச் செலுத்திச் செல்வார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## 2009 தான் முடிவா..?

8-ம் பக்கம் தொடர்ச்சி....



சமீபத்தில் தனது அனுபவத்தில் நடந்த ஒரு சம்பவத்தை சமூக ஊடகம் ஊடாக பகிர்ந்துள்ளார். அதில், குளிர் அதிகமான ஒரு நாள்வெளியில் இருந்ததால் நாங்கள் வீட்டில் வளர்த்து வந்த தூதுவளை பட்போச்சு. எறிய மனம் இல்லை. தமிழ் மண்ணின் நினைவுகளை மீட்டு, வீட்டில் பிள்ளை போலஇருந்த ஒன்று. ஓரமாக வைத்திருந்தோம். மூன்று மாதங்கள் ஒரு ஓரத்தில் இருந்தது. இன்று எதே பொருள் தேடும்போது தவறுதலாக பார்த்தபோது ஆணிவேரில் இருந்து ஒரு முளை வந்திருந்தது. பெரு மகிழ்வு!

உணர்வுகள்:

அ) தமிழர்கள் நாங்கள் தமிழ் மண்ணில் மட்டும் வாழ்வதற்கு ஏற்றாற்போல் படைக்கப்பட்டவர்கள். பிடுங்கி நட்ட ஒரு மரப்போல் கனடாவில் செயற்கையாக சூடு ஏற்றப்பட்ட இடத்தில் வாழ்கிறோம். சூடு இல்லாவிடி செத்துபோய்தான் விடுவோம்.....

ஆ) பல மாதங்கள் பட்டுபோய் விட்டது என எண்ணிய தூதுவளையின் ஆணிவேரில் இருந்து முளை வந்தது போன்று. 2009 இல் தமிழீழ விடுதலைப் போராட்டம் அழிக்கப்பட்டது விட்டது என எதிரிகள் நினைத்துக் கொண்டிருக்கின்றனர். தமிழீழ விடுதலை 60 ஆண்டுகளுக்கு முன்னர் முளைத்து தமிழ் மண்ணில் ஆழவேருன்றி நின்ற ஆல மரம் அது மீண்டும் மீண்டும் முளைக்கும் விடுதலைக்கான இலக்கை எட்டும் வரை என்று குறிப்பிட்டு சிறு சிறு விடயங்களிலும் தாயகத்தை தொடர்புபடுத்தி தமிழ் மக்கள் மத்தியில் மண்பற்றை எடுத்துரைக்கும் பல நிகழ்வுகளை பகிர்ந்து வருகிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

## மைத்திரிக்கு சு.க உறுப்பினர்கள் நெருக்கடி!



ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சியின் 20 அமைப்பாளர்கள் தமது பதவியில் இருந்து விலகி தனி குழுவொன்றை உருவாக்க தீர்மானித்துள்ளதாக தகவல்கள் வெளியாகியுள்ளன.ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சியின் மாற்றுக் குழு என்ற பெயரில் செயற்படத் தீர்மானித்துள்ள இந்த அணியினர், தமது எதிர்கால அரசியல் திட்டங்கள் தொடர்பாக கொழும்பு பொது நூலகத்தில் இன்று (வியாழக்கிழமை) விசேட ஊடகவியாளர்கள் சந்திப்பு ஒன்றை நடத்தவுள்ளதாகவும் கூறப்படுகின்றது. ஐக்கிய தேசிய முன்னணியின் தலைவர்களுடன் பல சுற்றுப்பேச்சுக்களை நடத்தியுள்ள இந்தக் குழுவினர், இன்று காலை தமது அடுத்தகட்ட திட்டங்கள் குறித்து வெளிப்படுத்தவுள்ளனர். ஜனாதிபதி மைத்திரிபால சிறிசேனவுடன், முன்னாள் ஜனாதிபதி மஹிந்த ராஜபக்ஷ இணைந்து செயற்பட ஆரம்பித்துள்ள நிலையிலேயே ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சியின் 20 அமைப்பாளர்கள் தமது பதவியில் இருந்து விலகி தனி குழுவொன்றை உருவாக்க தீர்மானித்துள்ளதாக கூறப்படுகின்றது.

## ஒன்ராறியோவில் விழித்திருக்கும் போதே விழி பிதுங்க வைக்கும் மோசடி.!



பழைய வாகனங்களை வாங்கும் பொழுது ஓடோ மீட்டர் எனப்படும் வாகனம் பயணித்த தூரத்தின் மொத்த அளவு முக்கிய காரணிகளில் ஒன்றாக பார்க்கப்படுகிறது. அதில் காட்டும் கிலோமீட்டரை பொறுத்து வாகனத்தின் விலை நிர்ணயிக்கப்படுகிறது. இதனை சாதகமாக பயன்படுத்திக்கொண்டு ஒன்ராறியோவில் பழைய வாகனங்களை கையாண்டு வரும் நிறுவனம் ஒன்று மோசடியாக முறையில் வாகனங்களை விற்று வந்தது அம்பலமாகியுள்ளது.

ஒன்ராறியோவில் Markham- Unionville பகுதியில் செயல்பட்டு வரும் euro Premium auto limited என்ற நிறுவனம் தான் இத்தகைய மோசடியில் ஈடுபட்டுள்ளது. இங்கு வாகனங்களை வாங்க வேண்டாம் என்றும், அவர்கள் அங்கீகரிக்கப் டீலர் இல்லை என்றும் அறிவுறுத்தப்பட்டுள்ளது. ஒரு வாகனம் மூன்று லட்சம் கிலோமீட்டருக்கு மேல் ஓடியிருக்கிறது என்றால், சில நுட்பங்களை பயன்படுத்தி அதனை வெறும் 1 லட்சம் கிலோமீட்டராக காண்பிக்க முடியும். அந்த வகையில் பல வாகனங்களில் இப்படியான மோசடி செய்யப்பட்டு, பலரும் ஆயிரக்கணக்கான டொலர்களை இழந்து தவித்துள்ளனர்.

## குடிவரவுத்துறை அமைச்சரின் நேரடி தலையீடு..!

### நாடு கடத்தப்பட இருந்த குடும்பத்திற்கு அடித்த அதிர்ஷ்டம்.!



கொலம்பியா நாட்டைச் சேர்ந்த குடும்பம் ஒன்று, உயிருக்கு அஞ்சி 2012ஆம் ஆண்டு கனடாவுக்கு ஓடி வந்தது. கனடாவில் புகலிடம் கோரிய அவர்களின் கோரிக்கை விசாரிக்கப்படுவதற்கே ஐந்து ஆண்டுகள் ஆகிய நிலையில், அது நிராகரிக்கவும் பட்டது.

2012இல் கொலம்பியாவில் இருந்த சூழல் தற்போது மாறிவிட்டதாகத் தெரிவித்த நீதிமன்றம், அவர்களது கோரிக்கையை நிராகரித்தது.

கனடா வந்த பின் அந்த குடும்பத்தில் ஒருவரான டூரளைய, 2017ஆம் ஆண்டு கனேடியர் ஒருவரைத் திருமணம் செய்து கொண்டார். அவரது சகோதரரான Camiloவுக்கும் அவரது மனைவி Bettsyக்கும் ஒரு குழந்தையும் பிறந்தது.

தற்போது மூன்று வயதாகும் தாமஸ் என்ற அந்த குழந்தை ஒரு கனேடிய குடிமகன். இந்நிலையில், இம்மாதம் 24ஆம் திகதி கனடாவிலிருந்து கொலம்பியாவுக்கு நாடு கடத்தப்பட இருந்த ஆழவெழலயள குடும்பம், புலம்பெயர்தல் துறை அமைச்சரான Ahmed Hussen தலையீட்டின் பேரில், இன்னும் பதினெட்டு மாதங்கள் தற்காலிக வாழிட மற்றும் வேலை உரிமங்களுடன் கனடாவில் வாழ அனுமதிக்கப்பட்டுள்ளது.

அத்துடன் தங்கள் மனிதநேய, மற்றும் கனேடியரை திருமணம் செய்ததன் அடிப்படையிலான விண்ணப்பங்களைத் தொடர்வதற்கும் இது மிகவும் உதவியாக இருக்கும் என்று அக்குடும்பத்தினர் மகிழ்ச்சியுடன் கூறியுள்ளனர்.

## வாட்ஸ்அப் இல் அறிமுகமாகியுள்ள மற்றுமொரு புதிய வசதி!



வாட்ஸ்அப் செயலியில் ஏராளமான ஸ்டிக்கர்கள் தரப்பட்டுள்ளன. இவற்றுள் விசேட தினங்களுக்கான வாழ்த்துக்களும் அடங்கும். இங்கு தரப்பட்டுள்ள ஸ்டிக்கர்களை விடவும் நாம் சுயமாக தயாரித்து புதிய ஸ்டிக்கர்களை வாட்ஸ் ஆப்பில் பயன்படுத்தவும் முடியும்.

இதற்கு பின்வரும் படிமுறைகளைப் பின்பற்ற வேண்டும்.
கூகுள் பிளே ஸ்டோரிற்கு சென்று background eraser எனும் செயலியை தரவிறக்கம் செய்துகொள்ளவும்.பின்னர் ஸ்டிக்கராக பயன்படுத்தவுள்ள உங்கள் புகைப்படங்கள், செல்.'.பிக்கள் அல்லது வேறு படங்களை தரவிறக்கம் செய்து கைப்பேசியில் சேமிக்கவும்.

Backgrounderaser அப்பிளிக்கேஷனைப் பயன்படுத்தி ஸ்டிக்கராக பயன்படுத்தவுள்ள படங்களின் பின்னணிகளை நீக்கிய பின்னர் சேமிக்கவும். இவ்வாறு குறைந்தது 3 ஸ்டிக்கர்களை உருவாக்கவும். அல்லாவிடில் வாட்ஸ்அப் ஆனது குறைந்தளவு ஸ்டிக்கர்களுக்கு சப்போர்ட் ஆகாது. பின்னர் மீண்டும் பிளே ஸ்டோர் சென்று Personal App for WhatsApp எனும் செயலியை தரவிறக்கம் செய்து நிறுவவும். இப்போது குறித்த அப்பிளிக்கேஷனை செயற்படுத்தியதும் நீங்கள் உருவாக்கிய ஸ்டிக்கர்கள் தென்படும். அவற்றிற்கு அருகே உள்ள Add எனும் பொத்தானை அழுத்தவும். மீண்டும் காட்சிப்படுத்தப்படும் செய்தியில் (Would you like to add Eraser to WhatsApp) Add பொத்தானை அழுத்தவும். இப்போது வாட்ஸ் அப்பின்சட் விண்டோவை திறந்து ஸ்டிக்கர் பகுதிக்கு செல்லவும். அங்கே உங்ளால் உருவாக்கப்பட்ட ஸ்டிக்கர்கள் காண்பிக்கப்படும்.

## அறிமுகமானது உலகின் மிகச் சிறிய கணினி, அரிசி பருக்கையை விட சிறியது!



வாஷிங்டன்: அரிசி பருக்கையை விட சிறிய அளவிலான, உலகின் மிகச் சிறிய கணினியை மிச்சிகன் பல்கலை கழக ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளனர். இந்த கருவிக்கு 'மிச்சிகன் மைக்ரோ மோட்' என பெயரிடப்பட்டுள்ளது. சாதரண கணினிகளில் இருப்பதைப் போல, மின்சாரம் இல்லாதபோதும் தகவல்களை சேமித்து வைக்கும் வசதி இந்த மைக்ரோ மோட்டில் இல்லை. மைக்ரோ மோட் கணினியை ஸ்விட்ச் ஆ.'.ப் செய்தால், தகவல்கள் அழிந்துவிடும் என சின்குவா செய்தி நிறுவனம் கூறியுள்ளது. மில்லிமீட்டர் அளவுள்ள இந்த கருவியை கணினி என்று சொல்ல முடியாது என்றாலும் கூட, அன்றாட பயன்பாட்டிற்கு தேவையான செயற்பாட்டுதிறனை கொண்ட கருவியாக உள்ளது என்று மின் மற்றும் கணினி பொறியியல் துறை பேராசிரியர் டேவிட் ப்ளாவ் கூறினார். 'மிச்சிகன் மைக்ரோ மோட்' என பெயரிடப்பட்டுள்ள இந்த மைக்ரோ கணினி கருவி ராண்டம் ஆக்சஸ் மெமரி, போட்டோவால்டிக்ஸ், செயலிகள், வயர்லெஸ் டிரான்ஸ்மிட்டர் மற்றும் ரிசீவர்கள் கொண்டுள்ளது. இவ்வளவு சிறிய கருவியின் மேல் ரேடியோ ஆண்டனாக்கள் பொருத்த முடியாது என்பதால், இக்கருவியில் ஒளி வெளிச்சத்தால் தகவல் பரிமாற்றம் நடக்கிறது.
சென்சார் மூலம் உஷ்ணநிலையை துல்லியமாக கணிக்க கூடிய இந்த கருவி, புற்றுநோயியல் ஆராய்ச்சிக்கு உதவும் என தெரிகிறது. இந்த கருவி, புற்று நோய் ஆராய்ச்சிக்கு உதவியாக அமையும். உஷ்ணநிலை சென்சார்கள் சிறியதாகவும் உயிர் இணக்கமாகவும் உள்ளதால், புற்றுநோய் உயிரணுக்கள் வளர்ந்து வரும் ஒரு எலியின் உடலில் செலுத்தி ஆராய்ச்சி செய்யலாம என தெரிவித்தார் கதிரியக்க சிகிச்சை மற்றும் உயிர் மருத்துவ பொறியியல் பேராசிரியர் கேரி லூக்கர்.மேலும், புற்றுநோய் உயிரணுக்களுக்கும், சாதரண உயிரணுக்களுக்கும் உள்ள வேறுபாட்டினை இந்த உஷ்ணநிலை சென்சார்கள் மூலம் ஆராய்ச்சி செய்யலாம். இதன் மூலம், ஆதி நவீன சிகிச்சைகள் மேற்கொள்ள உதவியாக இருக்கும் என்றும் கூறினார். விஎல்எஸ்ஐ தொழில்நுட்பம் மற்றும் சர்க்யூட்கள் குறித்த சிம்போஸியாவில் இந்த ஆராய்ச்சி சமர்ப்பிக்கப்பட்டது.



## நிலவின் மறுப்பக்கத்தில் சீனா செய்த சாதனை.!



நிலவில் மனிதனை அனுப்புவதற்கான நடவடிக்கையில் சீனாவின் விண்வெளி ஆய்வு மையம் ஈடுபட்டுள்ளது. அதற்கு முன்னதாக அங்கு தாவரங்கள் மற்றும் விலங்குகளை அனுப்பி அவை எவ்வாறு அந்த சூழலில் வாழ்கின்றன. அவற்றில் ஏதாவது பாதிப்புகள் ஏற்படுகிறதா என்பதை கண்டறிவதற்காக சீனாவின் ஷவிண்வெளி ஆய்வு மையம், சாங் இ 4 மிஷ்ன (Chang'e 4 Mission) என்ற திட்டத்தை செயல்படுத்தி வருகிறது. அதன்படி, பூமியை நோக்கி காணப்படாத நிலவின் மற்றொரு பகுதியான வோன் கர்மான் பகுதியில் ஆய்வு மேற்கொண்டுள்ள சீனாவின் விண்வெளி ஆய்வு மையம் கடந்த டிசம்பர் மாதம் விண்கலம் ஒன்றை அனுப்பியது.இது சீனாவின் ஷிசாங் விண்வெளி நிலையத்தில் இருந்து லோங் மார்ச் 3பி என்ற ராக்கெட் மூலம் செலுத்தப்பட்டது. வெற்றிகரமாக விண்வெளியை அடைந்த அந்த விண்கலம் இன்று காலை நிலவின் மறுப்பகுத்தின் கரடுமுரடான பகுதிகளில் வெற்றிகரமாக தரையிறங்கியது.

நிலவின் மறுபக்கத்தில் விண்கலத்தை அனுப்பியதன் மூலம் சீனா வரலாற்று சாதனையை படைத்துள்ளது. நிலவின் மறுபக்கத்தில் விண்கலத்தை இறக்கிய முதல் நாடு என்ற பெருமையையும் சீனா பெற்றுள்ளது. இதன் மூலம் நிலவில் உள்ள பாறைகள், மண் ஆகியவற்றை பூமிக்கு கொண்டு வந்து ஆய்வுகயள் மேற்கொள்ள சீனா திட்டமிட்டுள்ளது.

## வந்துவிட்டது கூகுள் க்ரோம்-ன் புதிய அப்டேட்!



உலக அளவில் பிரபலமான கூகுள் ப்ரௌசர் க்ரோம், அதன் புதிய அப்டேட் ஒன்றை வெளியிட்டு உள்ளது.இந்த புதிய அப்டேட் க்ரோம் 67 என்று கூறப்படுகிறது. இது லினக்ஸ், மேக் ஓ.எஸ் மற்றும் விண்டோஸ் ஆகிய நிறுவனங்களின் கணினிகளில் பயன்படுத்தக் கூடிய வகையில் இருக்கும் என்று தெரிவிக்கப்பட்டு உள்ளது. இந்த அப்டேட்டின் மிக முக்கிய அம்சமாக பார்க்கப்படுவது யுசு மற்றும் ஏசு வசதிகளை மெருகேற்றித் தருவதால் தான் என்று கூறப்படுகிறது. இந்த கூகுள் க்ரோம்-ன் புதிய அப்டேட் வெர்ஷனின் முழு ஐடி, க்ரோம் 67.0.3396.62 ஆகும். க்ரோம்-ன் அப்டேட் மூலம் HTTP உள்ளடக்க முடியும். க்ரோம்-ன் 67 வது வெர்ஷன் வெளியாகி உள்ளது. இந்நிலையில், ஆண்ட்ராய்டு மற்றும் ழைுளு ஆகிய ஆபரேட்டிங் சிஸ்டங்களுக்கு தகுந்தாற் போலவும் சீக்கிரம் க்ரோம்-ன் அப்டேட் வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதன் மற்றொரு முக்கிய அம்சமாக பார்க்கப்படுவது, க்ரோம் ப்ரௌசரில் இதுவரை நிலவி வந்த 34 ஆன்லைன் அச்சுறுத்தல்களை இதில் தீர்த்துள்ளதாம் கூகுள். இதன் மூலம் தரவுகள் களவு போவதை பெருமளவு தவிர்க்க முடியும் என்று கூறப்படுகிறது.

## கேமர்களுக்கான வை.'.பை ரௌட்டர் வந்தாச்சு!



நெட்கியர் மோடம் கம்பெனி புதிதாக வீடியோ கேம் விளையாடுவதை முன்னிலைப்படுத்தி நெட்கியர் எக்ஸ் ஆர் 500 என்ற வைபை ரௌட்டரை வெளியிட்டது.

விர்ச்சுடல் ரியாலிட்டி ஆன்லைன் கேம் விளையாடுபவர்கள் எந்த தடையுமின்றி அதை விளையாட இது துணைபுரியும். ட்யூயல் கோர் 1.7 ஜிகாஹெர்ட்ஸ் பிராசசர், க்வாட் ஸ்ட்ரீம் வேவ் 2 வைபை, அதிக திறன் கொண்ட 4 ஆண்டனாக்கள், 2 யூஎஸ்பி போர்ட், 512 எம்பி ரேம், 256 எம்பி ஸ்டோரேஜ் வசதி, சிங்கிள் மானிட்டர் ஸ்கிரீன் கொண்டது.

4K ஸ்ட்ரீமிங், விர்ச்சுவல் ரியாலிட்டி, வீடியோ கேமிங் ஆகியவற்றிற்குத் தடையற்ற இன்டர்நெட் வசதியை வழங்குகிறது நைட்கியர் நைட்ஹாக் எக்ஸ் ஆர் 500 மோடம்

## ஆரோக்கியமான கூந்தலுக்கு ...



தலை முடி ஆரோக்கியம்

மாதம் ஒரு முறை மருதாணி இலைகளை அரைத்து தலைக்குத் தேய்த்தால் நல்ல குளிர்ச்சி கிடைத்து, தலை முடி ஆரோக்கியமாக இருக்கும்.

வாரத்தில் 2 முறைகள் ஆலிவ் ஆயிலை மயிர்க் கால்களில் படும்படி தேய்த்து, பின்பு சிகைக்காய் தூள் பயன்படுத்திக் குளித்தால் தலைமுடி ஆரோக்கியமாக இருக்கும்.

தலை முடி வளர்ச்சி

தினமும் சிறிகளவு வேப்பங் கொழுந்தை எடுத்து வாயில் மென்று சாப்பிட்டால் தலைமுடி நிறைய வளரும்.

ஐந்து இதழ்கள் உள்ள செம்பருத்திப் பூவை அரைத்து நல்லெண்ணெயில் காய்ச்சி, வடிகட்டியபின் தலைக்குத் எதேய்த்தால் தலைமுடி அடர்த்தியாக வளரும்.

வாரத்திற்கு 2 முறைகள் நல்லெண்ணெய் தேய்த்துக் குளித்து வந்தால், முடி உதிராது. செம்பருத்தி இலைகளை அரைத்து சீயக்காயுடன் கலந்து தலைக்கு தேய்த்து குளித்தால் ஷாம்பு மாதிரி இருக்கும். நல்ல குளிர்ச்சி கிடைத்து, முடி வளரும்.

தலை முடி உதிர்தல்

செம்பருத்திப் பூவை அப்படியே சாப்பிட்டால் உடல் சூடு தணிந்து, முடி உதிர்வது நிற்கும்.

வெந்தயத்தைப் பாலில் அல்லது தண்ணீரில் ஊற வைத்து, அரைத்துத் தலைக்குத் தேய்த்து குளித்து வந்தால் தலை முடி உதிராது.

முட்டையின் வெள்ளைக் கருவை மட்டும் எடுத்து தலைக்குத் தடவி 15 நிமிடம் ஊறிய பின் தலைக்கு சிகைக்காய் தேய்த்துக் குளித்தால் தலைமுடி மிகவும் மிருதுவாக இருக்கும், முடி உதிர்தலும் நிற்கும்.

செம்பட்டை நிற முடி

செம்பட்டை நிற முடிஉடையவர்கள் மருதாணி இலைகளை அரைத்துக் கலந்து காய்ச்சிய எண்ணெய்யை தேய்க்க வேண்டும்.

நரைமுடி

கருவேப்பிலையை அரைத்துச் சாறு எடுத்து, அந்த சாறு அளவு தேங்காய் எண்ணெய்யை இத்துடன் கலந்து, காய்ச்சி (வெண்ணெய் உருக்குவது போல) வடிகட்டி வைத்துக் கொண்டு, தலைக்குத் தேய்த்து வந்தால் நரை மறையும்.

நெல்லிக்காய் சாற்றில் மருதாணியை அரைத்து தலைக்கு தேய்த்து வந்தால் நரை மறையும்.



## மெஹந்தி நீண்ட நாட்கள் கைகளில் இருக்க வேண்டுமா?

பண்டிகை காலங்களில் பெண்கள் கைகளை அழகுப்படுத்த மெஹந்தி வைப்பார்கள். இவ்வாறு கைகளுக்கு வைக்கும் போது, அவை விரைவிலேயே மங்க ஆரம்பிக்கும். அதுமட்டுமின்றி பலர், இவ்வாறு கையில் வைக்கும் மெஹந்தி எளிதில் போய்விடுவதால், வெறுத்து அதனை வைப்பதை தவிர்க்கின்றார்கள். எனவே இத்தகைய மெஹந்தியை நீண்ட நாட்கள் தக்க வைப்பதற்கு, ஒருசில ட்ரிக்ஸ் உள்ளன. அவற்றை சரியாக பின்பற்றி, மருதாணியை வைத்தால், நிச்சயம் மருதாணியானது நீண்ட நாட்கள் கைகளில் இருக்கும். இப்போது, அந்த மெஹந்தி மருதாணியானது நீண்ட நாட்கள் கைகளில் இருப்பதற்கு என்னவெல்லம் செய்ய வேண்டும் என்று பார்க்கலாம். கைகளை நன்கு கழுவவும் மெஹந்தி வைக்கும் முன், கைகளை நன்கு சுத்தமாக கழுவிக் கொள்ள வேண்டும். அதிலும் டோனர் கொண்டு சுத்தம் செய்து மிகவும் சிறந்தது. கெட்டியான மெஹந்தியைப் பயன்படுத்தவும் மெஹந்தி போடும் போது, நன்கு அடர்த்தியான கோடுகளைப் போடுவதால், அவை சருமத்தில் நன்கு ஊடுருவி, நீண்ட நாட்கள் இருக்கும்.







## 7 வித்தியாசங்கள்







## ரொறன்ரோவில் உள்ள இஸ்மாயிலி மையத்திற்கு இப்படியொரு சிறப்பா..?



கனடாவில் உள்ள இஸ்மாயிலி மையம், வழிபாட்டுத் தலமாகவும், இஸ்லாம் மதத்தின் பண்பாடு, கல்வி ஆகியவற்றை அறிந்துகொள்ளும் அருங்காட்சியகமாகவும் உள்ளது.

ரொறன்ரோவில் அமைக்கப்பட்டுள்ள இஸ்மாயிலி மையம் உலகிலுள்ள இஸ்மாயிலி மையங்களில் ஆறாவதாகும். புகழ்பெற்ற ஆகா கான் அருங்காட்சியகத்தின் அருகில் இந்த மையம் அமைக்கப்பட்டுள்ளது. நவீன கட்டிடக் கலையைப் பயன்படுத்தி இஸ்லாம், கனடா நாட்டு வடிவமைப்பு முறைகளால் இக்கட்டிடம் வடிவமைக்கப்பட்டுள்ளது. இந்தக் கட்டிடத்தை வடிவமைத்தவர் இந்தியாவின் புகழ்பெற்ற கட்டிடக் கலைஞர்களில் ஒருவரான சார்லஸ் கொரிய. கனடா நாட்டில் வசிக்கும் இஸ்லாமியரின் நீண்ட நாள் கனவுகளில் ஒன்று இஸ்மாயிலி மையம். இதற்கான பணிகள் 2010-ம் ஆண்டு தொடங்கப்பட்டது. ரூபாய் 30கோடி செலவில் கட்டப்பட்டுள்ள இஸ்மாயிலி மையத்தில் இஸ்லாம் மதத்தின் பண்பாடு, கருத்தரங்குக் கூடம், நூலகம், வழிபாட்டு அரங்கு ஆகியவை உள்ளன. இம்மையத்தின் பணிகள் கடந்த 2014-ம் ஆண்டு முடிக்கப்பட்டு அந்நாட்டு பிரதமர் ஸ்டீபன் ஹார்பர், அரசர் கரீம் ஆகா கானால் திறந்துவைக்கப்பட்டது. கனடா நாட்டிலுள்ள இஸ்லாம் மக்களின் வெளிப்பாடாக இஸ்மாயிலி மையம் உள்ளது.

## கனடாவில் IBC, லங்காஶ்ரீ குழுமம் வருகைக்கு கடும் எதிர்ப்பு... 8-ம் பக்கம் தொடர்ச்சி...

இதற்க்கு முன்பும் இலங்கை ரூபவாஹினி தொலைக்காட்சி வரவையும் கனடா தமிழ்மக்கள் எதிர்த்தனர். இவர்கள் சில வேளைகளில் இலங்கை அரசாங்கத்தின் கைக்கூலிகளாக இயங்க போகிறார்களா? இல்லை ஈழத்தமிழ் மக்களுக்கு உதவ முன்வருகின்றார்களா என்ற ஐயமே இதற்கான காரணமாக அமைகின்றது. தமிழ் ஈழ விடுதலைப்புலிகளால் (year2000) லண்டனில் உருவாக்கப்பட்டதேசியத்தின் சொத்தாகிய IBCயை கைவசம் வைத்திருக்கும் திரு பாஸ்கரன்அவர்கள் வன்னியிலும் புலம்பெயர் தேசங்களிலும் சுயவிளம்பர உத்தியை கையாள்வதாக பல்வேறு விசனங்கள் உள்ளநிலையில், IBC தமிழ் வன்னியில் விளம்பரத்துக்காக செய்யும் உதவிகளை,

தாமே அந்தரிமக்களின் மீட்பார்போல் தம்மை, தமது ஊடகங்களிலேயே விளம்பரப்படுத்தும் கடந்தகால செயல்பாடுகள் மக்களின் கடும் விமர்சனத்தை சந்தித்துள்ளது. மேலும் தமிழ் ஈழ புலிகள் அமெரிக்காவின் இரட்டை கோபுரத்தை தகர்த்தார்கள் , போராட்டத்துக்கு போதை பொருட்கள் கடத்தினார்கள், மற்றும் அவர்கள் ஒரு பயங்கரவாத அமைப்பு என்று 2009 ஆண்டுக்கு பின்னர் இந்த புதிய IBC பொறுப்பாளர்கள் பரபரப்பு செய்திகளை வெளியிட்டு இலங்கை அரசை மகிழ்ச்சிப்படுத்தினார்கள்.

பின்பு IBC யை இலங்கைக்கே கொண்டு சென்றுவிட்டனர். இலங்கை இனப்படுகொலை செய்த இராணுவத்தை புகழ்வதையும், அவர்களின் கடந்தகால இனவழிப்பு செயல்பாடுகளையும் மறைத்து, புலம்பெயர் மக்கள் மத்தியில் தமது ஊடக பலத்தின் மூலம் அவர்கள் மக்களுக்கு உதவுவதாக தமது ஊடகங்களில் அவர்களை புனிதர்களாக காட்டி, இலங்கை இராணுவத்துக்கும், இலங்கை அரசுக்கும் துதிபாடும் செயல்பாடுகளில் இறங்கி, கடந்த கால இலங்கை அரசின் பயங்கரவாதத்தை மறைக்கும் செயல்பாடே இன்றைய IBC,, லங்காசிறி குழுமத்தின் நடவடிக்கை என்றே பார்க்கப்படுகின்றது .

வன்னி மக்களுக்கு உதவிகள் செய்யும் காட்சிகளை பிரச்சாரப்படுத்தி தமது ஊடக வலையமைப்பை உலகம் முழுவது பரப்பும் செயல்பாடே இந்த IBC தமிழ் நிகழ்வுகளும் ஊடக சந்திப்புகளும். இங்கு உள்ள அமைப்புக்கள், தொண்டு நிறுவனங்கள், பல்வேறு வழிகளிலும் உதவும் மக்கள், பத்திரிகைகள் , வானொலிகள், தொலைக்காட்சிகள், வணிக கையேடுகள் மற்றும் இணையதளஊடகங்கள் ,எமது ஈழத்தமிழ் மக்களுக்கு ஒரு சிறிதளவேனும் இதுவரை காலமும் உதவவில்லையா ?

தாங்கள் தான் ஈழத்தமிழரை வாழவைக்கும் தெய்வங்கள் என நினைத்து காலூன்றி தங்கள் காரியங்களை நிறைவேற்ற நினைப்பது சுயநலத்தின் உச்சக்கட்டம்.

## பிரபாகரனின் புகைப்படத்தோடு தவறான தலைப்பிட்ட...... -1-ம் பக்கம் தொடர்ச்சி...




யாழில் இருந்து வெளியாகும் வார பத்திரிகை ஒன்றின் முகப்பு பக்கத்தில் விடுதலைப்புலிகள் உறுப்பினர்கள் மத்தியில் தலைவர் வே.பிரபாகரன் நடந்து வரும் படத்தை பிரசுரித்து இரவு இரண்டு மணிக்கு பெண் கேட்ட தேசிய தலைவர் என தலைப்பிடப்பட்ட நிலையில் பத்திரிகை வெளியாகி உள்ளது. குறித்த செய்தி தலைப்புடன் தொடர்புடைய செய்தியானது இந்தியாவை சேர்ந்த முச்சக்கர வண்டி சாரதியான சங்கர் என்பவரது கதையாகும். தொடர் கொலைகளை செய்த கொலையாளியின் மரண வாக்கு மூலம் என செய்தி வெளியாகியுள்ளது.

குறித்த செய்திக்கு இடப்பட்ட தலைப்பு , மற்றும் படம் என்பன வேண்டும் என்றே போடப்பட்டது என தெரிவித்தே பருத்தித்துறை பகுதிகளில் பத்திரிக்கையின் பிரதியை தீயிட்டு கொழுத்தி தமது எதிர்ப்பை வெளிக்காட்டினார்கள்.தமிழ் மக்கள் மத்தியில் தேசிய தலைவர் என்றால் வே.பிரபாகரனே ஞாபகத்திற்கு வரும் நிலையில் வேண்டும் என்றே தமிழ் மக்களின் மனதை புண்படுத்தும் நோக்குடன் இச் செய்தி வெளியிடப்பட்டு உள்ளது என அப்பகுதி இளைஞர்கள் தெரிவித்தனர்.

## ஒன்றுபட்ட குரல் - தமிழ் ஊடக மன்றம் கனடாவின் குளிர் கால ஒன்றுகூடல் நிகழ்வு..!




தமிழ் ஊடக மன்றம் கனடாவின் குளிர் கால ஒன்றுகூடல் நிகழ்வு நேற்று டிசம்பர் 9 ஆம் திகதி மாலை இடம்பெற்றது. இதில் பலதரப்பட்ட ஊடகங்களும், ஊடகவியலாளர்களும், சமூக ஆர்வலர்களும், நலன் விரும்பிகளும் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

புதிய பரிணாமத்திலும், ஒன்றுபட்ட குரலாய் இடம்பெற்ற இந்நிகழ்வு தமிழ் மக்களிடம் மிகுந்த வரவேற்பை பெற்றது.தமிழ் மக்கள் நலன் சார்ந்த விடயங்கள் குறித்து பேசப்பட்டன. வலிமையான தமிழ் சமூகத்தை கட்டமைக்கும் பணியில் ஊடகங்களின் பங்கு எத்தகையது என்பது குறித்த வாதங்கள் இடம்பெற்றன. மக்கள் மத்தியில் மக்களுடன் மக்களாக ரொறன்ரோவில் நடைபெறும் அனைத்து நிகள்வுகளையும் உடனுக்கு உடன் சமூக ஊடகங்கள் வாயிலாகவும், ஏனைய தொடர்பாடல் வசதிகள் மூலமாகவும் கொண்டு செல்லும் ஊடகங்களுக்கு பாராட்டு தெரிவிக்கப்பட்டது.

வன்னி மக்களுக்கு உதவுகின்றோம் என்று பறை சாற்றுவோர் இவ்வளவும் பெரிய தொகையில்; சுமார் 20லட்சம் (2 மில்லியன்) கனேடிய டொலர் (300 மில்லியன் இலங்கை ரூபாக்கள் ) செலவு செய்து IBC தமிழா 2019 கனடாவில் கொண்டாட என்ன மூல காரணம்? 1000 ஈழத்து கலைஞர்களை மேடையேற்றி அழகு பார்ப்பதிலும் பார்க்க இந்த 1000 ஈழத்து கலைஞர்களை ஈழத்துக்கு வரவைத்து எமது போராட்ட வரலாறு, விழுமியங்களை காட்டி அடுத்த சந்ததிகளை ஈழத்து பக்கம் பார்க்க வைத்தால் இவர்கள் IBC தமிழன்; இல்லையாயின் காசுக்காக கூலிக்கு மாரடிக்கும் பத்தோடு பதினொன்றான கூட்டத்தில் ஒன்றே! ஈழத்து மண்ணின் பேரில் வியாபாரிகள் சவாரி செய்வதை மக்கள் கேள்வி கேட்க தயங்கமாட்டார்கள். ஒரு தேசிய ஊடகத்தின் நிகழ்வு ஒரு சிலரின் சுய விளம்பரத்துக்கும், ஊதாரித்தனமான செயல்பாட்டுக்கும் அனுசரணை வழங்குவோர் இதன் பின்னணியை தீர ஆராயவேண்டியது காலத்தின் தேவை.

## கனடாவில் எவ்வாறெல்லாம் தமிழ் மக்கள் ஏமாற்றப்படுகின்றனர்..? உரக்க முழங்கும் ஊடகங்கள்.!



ஒரு பில்லியன் அமெரிக்க டொலர்கள் பெறுமதியான புலிகளின் சொத்து விபரங்கள் கடந்த சில வருடங்களுக்கு முன்பு வெளியிடப்பட்டன. அவை எல்லாம் இன்று என்ன ஆயிற்று என்றே தெரியாத அளவுக்கு சிலரால் விழுங்கப்பட்டுக்கொண்டு வரப்படுகிறது.

கனடா, சுவிட்சர்லாந்து, மலேசியா, பிரிட்டன், நோர்வே, சுவீடன் மற்றும் ஜேர்மனி போன்ற நாடுகளில் புலிகளுக்கு காணப்படும் சொத்துக்கள் தமிழ் மக்களுக்கானது அவற்றை கையகப்படுத்தி தமது சுயலாபத்திற்காக விற்று, ஈழத்தில் அல்லல் படும் உறவுகளை கேற்பரற்ற நிலைக்கு தள்ளி விட்டு, கேளிக்கைகளில் கூத்தாடுகின்றனர்.

அதிகளவான சொத்துக்கள் கனடாவில் காணப்படுவதாகத் தெரிவிக்கப்படுகிறது. பல்பொருள் அங்காடிகள், வாகன விற்பனை நிலையங்கள், குத்தகை நிறுவனங்கள் உள்ளிட்ட பல்வேறு வழிகளில் புலிகள் பணத்தை முதலீடு செய்துள்ளதாகக் குறிப்பிடப்படுகிறது.

மக்களுடைய சொத்துக்களை மக்களுக்கானதாக அறிவிக்காமல் முடக்கி வைத்திருக்கும் அவை பற்றிய விவரம் வெளியே கொண்டுவரப்பட வேண்டும் என்று தளிர்' சஞ்சிகை தனது ஐந்தாவது ஆண்டு நிறைவை கொண்டாடும் விழாவில் நடந்த ஊடக சந்திப்பின் போது கூறப்பட்டது. வெறும் செய்திகளை வெளியிடுவது, விளம்பரங்களை வெளியிடுவது தான் ஊடகமேயன்றி, மக்கள் பிரச்சனைகளை உரக்க கூறுபவை தான் உண்மையான ஊடகங்கள் என்று கூறினார்.

## நீங்கள் வாழும் இந்த வாழ்க்கை எம் ஈழதேவதைகள் போட்ட பிச்சை.



நீங்கள் வந்து பெண்ணியம் பெரியாரிசம் பேசுமளவிற்கு எமது பெண்கள் ஒன்றும் தரம் தாழ்ந்து விடவும் இல்லை தாழ்ந்து விட நாம் அனுமதிக்கப் போவதுமில்லை. வீரத்தின் அடையாளம் எங்கள் பெண்கள் அதில் குளிர்காய்ந்த உங்களுக்கு எமக்கு வந்து சமத்துவம் பெண்ணியம் கற்பிக்க எந்தத்தகுதியும் இல்லை ஈழப்பெண்களுக்கு பாடம் எடுக்கும் நிலைக்கு எவரையும் நாம் அனுமதிக்க தயாராகவும் இல்லை அனுமதிக்க போவதுமில்லை சுற்றுலா பயணிகளாக பார்வையாளர்களாக பலர் எமது தேசத்திற்குள் வருகின்றீர்கள் வரவேண்டாம் என்று சொல்லவில்லை தாராளமாக வாருங்கள் எங்களை அழித்தவர்கள் காட்டிக்கொடுத்தவர்கள் எல்லோருடனும் கைலாகு கொடுத்து அளாவளாவி புகைப்படங்கள் எடுத்து பதிவேற்றுங்கள் அது உங்கள் உரிமை அதனை யாரும் தடுக்க போவதில்லை. ஆனால் எம் ஈழப் பெண்களுக்கு அறிவுரை கூறுமளவிற்கு இந்த உலகத்தில் எவனுக்கும் தகுதியில்லை. விடுதலைப் புலிகள் பெண்களுக்கு சம உரிமை கொடுக்கவில்லை என்று கூறுகின்றீர்களே! உலகிலேயே ஆண்களுக்கு நிகராக இராணுவம் காவல் துறை நீதி நிர்வாகத்துறை என்று அனைத்திலும் தடம் பதித்து தேசியத் தலைவனுக்கு தோல் கொடுத்தவர்கள் எம் தேசத்துப் பெண் தெய்வங்கள் என்பதை நீங்கள் அறிவீர்களா? அறிந்திருக்க வாய்ப்பே இல்லை மதுக்குவளைகளுடன் பப்பில் நடனமாடுவார்கள் இதெல்லாம் அறிந்திருக்க வாய்ப்பே இல்லை நீங்கள் வந்துபார்வையிட்டுஉங்கள் எண்ணங்களை மேற்கத்தேய மோகங்களை திணித்துவிட்டுச் செல்ல ஈழத்தமிழர் ஒன்றும் பரதேசிகள் இல்லை. ஆனால் தன்மானமுள்ள ஒவ்வொரு ஈழத் தமிழனும் கஞ்சியை குடித்தாலும் தன்மானத்தோடும் சுயகௌரவத்தோடும் வாழ்பவர்கள் கழுத்தில் தாலிக்கு பதில் நஞ்சுக்கொடியும் கையில் பிள்ளைக்கு பதில் பேராயுதமும் ஏந்தி சமராடியவர்கள் எம்தேச பெண்கள்.

நன்றி

## சீனாவுக்கு செல்லும் 'கனா'




சிவகார்த்திகேயனின் தயாரிப்பில் அருண்ராஜா காமராஜ் இயக்கிய 'கனா' திரைப்படம் கடந்த ஆண்டு டிசம்பர் 21 ஆம் திகதி வெளியாகி நல்ல வரவேற்பை பெற்றது. குறிப்பாக இளம்பெண்கள் கூட்டம் கூட்டமாக இப்படத்தை பார்த்து வருவதாக தகவல்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றது. இந்நிலையில் சீனாவில் கிரிக்கெட் விளையாட்டு இல்லை என்றாலும் ஏழ்மை நிலையில் உள்ள ஒரு கிராமத்து பெண், விளையாட்டு துறையில் முன்னேறிய கதை என்பதால் இப்படம் சீனாவில் பெரும் வரவேற்பை பெறும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. அந்த வகையில் சீனாவில் 'கனா' திரைப்படத்தை வெளியிட விநியோகிஸ்தர்களிடம் பேச்சுவார்த்தை நடந்து வருவதாகவும், இந்த பேச்சுவார்த்தை வெற்றியடைந்தால் சீன மொழியில் படம் டப் செய்யப்படும் என்றும் கூறப்படுகிறது. ஏற்கனவே இப்படத்தின் பத்திரிகையாளர் சந்திப்பு ஒன்றில் இந்த படம் சீனாவுக்கு செல்ல வேண்டும் என்பது தனது கனவு என நடிகர் சத்யராஜ் தெரிவித்திருந்தார் . இந்தியாவில் தயாரான ஸ்போர்ட்ஸ் படங்களில் ஒன்றான 'தங்கல்' சீனாவில் சூப்பர்ஹிட் ஆகி சுமார் ரூ.1000 கோடி வரை வசூல் செய்தமை குறிப்பிடத்தக்கது.

## நடிகையுடன் சிங்கப்பூர் வீதியில் சுற்றிய கமல்ஹாசன்!



மக்கள் நீதி மையம் என்ற கட்சியை தொடங்கி அரசியலில் ஈடுபட்டுள்ள நடிகர் கமல்ஹாசன் தற்போது இந்தியன் 2 வில் நடித்து வருகிறார். இந்நிலையில் கமல்ஹாசன் நடிகை பூஜா குமாருடன் சிங்கபூரில் வீதிகளில் சுற்றி-வருவது போன்ற புகைப்படங்கள் சமூக வலைத்தளங்களில் பரவி வருகிறது. ஆனால் இது ஷங்கருடனான இந்தியன்-2 பட வேலைகள் தொடர்பாக கமல் சிங்கப்பூர் சென்றுள்ளார். அவருடன் பூஜா சென்றுள்ளார் என கமலின் நெருங்கிய வட்டாரங்கள் தெரிவித்துள்ளனர்.

## சூர்யா-37 படத்தின் அசத்தலான பெர்ஸ்ட் லுக், டைட்டில் வெளியானது!



தமிழ் சினிமாவின் முன்னணி நடிகர்களில்ஒருவராக திகழும் சூர்யா தற்போது தனது 37ஆவது படத்தில் நடித்துவருகிறார்.

இந்நிலையில் அவரதுரசிகர்கள் நீண்ட நாட்களாக எதிர்பார்த்திருப்பது இப்படத்தின் தகவல்களைத்தான். லைக்கா புரொடக்‌ஷனின் தயாரிப்பில் கே.வி.ஆனந்த் இயக்கத்தில் உருவாகிவரும் இப்படத்தின் டைட்டில் மற்றும் பெர்ஸ்ட் லுக் தற்போது வெளியாகியுள்ளது. அந்த வகையில், இப்படத்திற்கு 'காப்பான்' என பெயரிடப்பட்டுள்ளது. டைட்டிலோடு வெளியாகியுள்ள பெர்ஸ்ட் லுக் ரசிகர்களால் மிகவும் கவரப்பட்டுள்ளது.பெர்ஸ்ட் லுக்கை வைத்து பார்க்கும் போது காப்பான் நாட்டைக் காக்கும் வீரனுக்கான கதைக்களத்தைக் கொண்டிருப்பதாக அறிய முடிகிறது.இப்படத்தில் மொகன்லால் மற்றும் ஆர்யா ஆகியோர் முக்கிய கதாபாத்திரங்களில் நடிக்கின்றனர். இப்படத்திற்கு ஹரிஸ் ஜெயராஜ் இசையமைத்துள்ளார்.

## ஆர்யா சாயிஷா விரைவில் திருமணம்?



நடிகர் ஆர்யாவை பொறுத்தவரை அவருடன் ஜோடியாக நடிக்கும் கதாநாயகிகளுடன் கிசுகிசு வருவது வழக்கமான ஒன்று. பூஜா, எமி ஜாக்சன், நயன்தாரா, தமன்னா என பல கதாநாயகிகளுடன் அவர் இணைத்து கிசுகிசுக்கப்பட்டார். உடன் நடிக்கும் நடிகைகளுக்கு அவர் பிரியாணி விருந்து கொடுத்து அவர்களிடம் நெருக்கத்தை ஏற்படுத்திக்கொள்வது வழக்கம் என்பார்கள். இதுவரை வந்த பல கிசுகிசுக்கள் எவ்வளவு வேகமாக பரவியதோ அவ்வளவு வேகமாக பொய் ஆகியது. ஆர்யாவை திருமணம் செய்துகொள்ளும்படி நண்பர்களும் குடும்பத்திலும் வற்புறுத்துகின்றனர்.



## மூன்றாவது டெஸ்ட் போட்டி குறித்து ரஹானே-லாங்கர் கருத்து!



இந்தியா மற்றும் அவுஸ்ரேலியா அணிகளுக்கிடையிலான மூன்றாவது டெஸ்ட் போட்டி, நாளுக்கு நாள் இரசிகர்களின் எதிர்பார்ப்பை தூண்டியுள்ளது. இந்நிலையில் இரசிகர்களின் எதிர்பார்ப்பை பூர்த்தி செய்யும் வகையிலும், தொடரின் வெற்றியை தக்கவைக்கும் வகையிலும், இரு அணிகளும் பல்வேறு திட்டங்களை வகுத்துள்ளன. இதற்கிடையில் மெல்பேர்னில் நாளை ஆரம்பமாகும் மூன்றாவது டெஸ்ட் போட்டிக்காக, இரு அணி வீரர்களும் மெல்பேர்ன் மைதானத்தில் தீவிர பயிற்சிகளை மேற்கொண்டு வருகின்றனர். இதற்கிடையில் இப்போட்டி குறித்து, இந்தியக் கிரிக்கெட் அணியின் துணைத் தலைவரான அஜிங்கிய ரஹானே கருத்து தெரிவித்துள்ளார். இதுகுறித்து அவர் மேலும் கூறிய கருத்துக்கள் இவை, துடுப்பாட்ட வீரர்கள் நிச்சயம் மேம்படுத்த வேண்டும், இதில் இருவேறு கருத்துகள் கிடையாது. துடுப்பாட்டம் பற்றி விவாதிக்கும் போது இது மிகவும் முக்கியமான ஒரு புள்ளியாகும். குறிப்பாக வெளிநாடுகளில் பந்து வீச்சாளர்கள் எதிரணியினரின் 20 விக்கெட்டுகளை டெஸ்ட் போட்டியில் வீழ்த்துகின்றனர். ஆகவே பந்து வீச்சாளர்களுக்கு எங்கள் தரப்பிலிருந்து உதவி கிடைத்தால் முடிவுகள் நமக்குச் சாதகமாக இருக்கும். பொக்சிங் டே டெஸ்ட் போட்டி, மெல்பேர்ன் மைதானம், மிகப்பெரிய இரசிகர்கள் கூட்டம், நான் உண்மையில் ஆர்வமாக இருக்கிறேன். 1-1 என்று இங்கு வந்துள்ளோம், ஆனால் பெர்த்தில் அவுஸ்ரேலிய அணி நிச்சயம் மீண்டு எழும் என்பது எங்களுக்குத் தெரிந்தே இருந்தது. பெர்த்தில் நமக்கும் வாய்ப்பு இருந்தது, ஆனால் அது முடிந்த கதை, எனவே அடுத்த டெஸ்ட் போட்டியில்தான் கவனம். ஒவ்வொரு செஷனிலும் சிறந்தவற்றை அளிக்க வேண்டும். டெஸ்ட் கிரிக்கெட்டில் இதுதான் முக்கியம்.

ஒரு செஷனில் போட்டி மாறிவிடும் என்பதால் நாம் 100 சதவீதத்திற்க்கும் அதிகமாக களத்தில் பங்களிப்புச் செய்ய வேண்டும். வரும் டெஸ்ட் போட்டியில் துடுப்பாட்ட வீரர்கள் இன்னும் கூடுதல் பொறுப்பேற்றுக் கொள்வார்கள் என்றே நினைக்கிறேன். என்னைப் பொறுத்தவரை மெல்பேர்னில் சதம் எடுப்பேன் என்று நினைக்கிறேன், ஏனெனில் அடிலெய்ட், பெர்த் டெஸ்ட் போட்டிகளில் நான் துடுப்பெடுத்தாடிய விதத்தைப்பார்க்கும் போது நிச்சயம் சதம் வரவேண்டும். நான் 2 சதங்கள் எடுப்பேன், ஆனால் பொதுவாக அவற்றைப் பற்றி சிந்திக்காமல் விளையாட வேண்டும். சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு அணிக்காக விளையாடினால் போதும். சொந்த மைல்கல்கள் பின்னால் வரும் என கூறினார். ரஹானேவை தொடர்ந்து, அவுஸ்ரேலியக் கிரிக்கெட் அணியின் பயிற்சியாளர் ஜஸ்டின் லாங்கர் கூறிய கருத்துக்கள் இவை, அடுத்தபடியாக இலங்கை அணிக்கெதிரான 2 டெஸ்ட் போட்டிகள் உள்ளன.

## இந்திய அணிக்கு எதிராக மோசமாக விளையாடிய வீரர்களைக் கொத்தாக வெளியேற்றியது கிரிக்கெட் ஆஸ்திரேலியா!

இது எதிர்பார்த்த மாற்றம்தான். ஆனால் ஒரே சமயத்தில் இத்தனை பேர் கொத்தாக வெளியேற்றப்படுவார்கள் என யாருமே எதிர்பார்த்திருக்க முடியாது. இலங்கைக்கு எதிரான இரு ஆட்டங்கள் கொண்ட டெஸ்ட் தொடரில் பங்கேற்கவுள்ள ஆஸ்திரேலிய அணி அறிவிக்கப்பட்டுள்ளது. இதில், இந்தியாவு-க்கு எதிராக மோசமாக விளையாடிய வீரர்களை நீக்கியுள்ளது கிரிக்கெட் ஆஸ்திரேலியா ஷான் மார்ஷ், மிட்செல் மார்ஷ், ஆரோன் ஃபிஞ்ச், பீட்டர் ஹாண்ட்ஸ்காம்ப் என ஆஸி அணியில் விளையாடிய நான்கு முன்னணி பேட்ஸ்மேன்கள் நீக்கப்பட்டுள்ளார்கள்.

## நியூசிலாந்து முதலில் துடுப்பாட்டம்



இலங்கை மற்றும் நியூசிலாந்து அணிகளுக்கு இடையிலான இரண்டாவது ஒருநாள் போட்டி இன்று ஆரம்பமாகியுள்ளது. போட்டியின் நாணயச் சுழற்சியில் வெற்றிபெற்ற நியூசிலாந்து அணி முதலில் துடுப்பெடுத்தாடி வருகின்றது

# TAMIL'S PAGE தேடிப்பார் Thedipaar.com






## கனடாவில் IBC, லங்காஸ்ரீ குழுமம் வருகைக்கு கடும் எதிர்ப்பு

IBC தமிழ் Presents IBC தமிழா Toronto 2019

கனடாவில் நடைபெறப்போகும் ஐடீஊ தமிழ் ஊடகவியலாளர் சந்திப்புக்கு வருகை தந்திருக்கும் IBC தமிழ் பாஸ்கரன் அவர்கள் கனடா வந்ததையொட்டி கடும் எதிப்பு கிளம்பியுள்ளது.

-6-ம் பக்கம் தொடர்ச்சி...

## 2009 தான் முடிவா..? இப்படியும் மீண்டு வரும் தமிழினம் இயற்கை உணர்த்திய பாடம்.!



கனடாவில் தமிழ்த்தாய் மன்ற செயலாளர் திருமுருகவேந்தன் முகநூல் வாயிலாகவும் தமிழ் மக்களிடத்தில் தாயக உணர்வுகளை வேரூன்ற செய்து வருகிறார். தமிழர்கள் குழு வாதத்தை தவிர்க்கவேண்டும், குழுக்களின் பின்னால் நிற்பதை விட கொள்கையின் பின்னால் நிற்கவேண்டும். அதைத்தான் தமிழீழத் தேசியத் தலைவர் நமக்கு ஊட்டியிருக்கின்றார். அதுதான் தமிழீழ விடுதலையை வென்றெடுக்க வழிகோலும் என பல விடயங்களில் குறிப்பிட்டுள்ளார்.

-3-ம் பக்கம் தொடர்ச்சி...

## பழுத்த அரசியல்வாதியின் பச்சை பொய் சுப்பிரமணிய சாமியோடு உறவாடும் லோகன் கணபதி.!



கடந்த நவம்பர் மாதம் 3 ஆம் திகதி இந்து நாகரிக கனடிய அருங்காட்சியகம் (Canadian Museum of Indian Civilization) டொரோண்டோ இன்டர்நேஷனல் சென்டரில் நடத்திய இந்து பாரம்பரிய மாத நிகழ்வில் பிரதம அதிதியாக பாஜக மூத்த தலைவர் சுப்ரமணிய சுவாமி கலந்துகொண்டார். மாநாட்டு மண்டபத்தில் சுப்ரமணிய சுவாமி அவர்கள் பல கனடிய அரசியல் பிரமுகர்களையும் சந்தித்து கலந்துரையாடினர். இதில் ஒண்டாரியோ பழமைவாதக்கட்சி தமிழ் பாராளுமன்ற உறுப்பினர் திரு லோகன் கணபதி அவர்களும் கலந்துகொண்டார் இந்நிகழ்வில் கனடிய பிரதமர் ஜஸ்டின் ட்ருடோ அவர்களும் கலந்து கொள்ளவுள்ளதாக விழா அழைப்பில் குறிப்பிடப்பட்டிருந்த பொழுதிலும் அவர் கலந்துகொள்ளவில்லை.

ஈழத்தில் தமிழ்மக்களை இனப்படுகொலை செய்த இரஜபக்சவிற்கு பாரத ரத்னா விருது வழங்க சிபாரிசு செய்ததோடு தொடர்ச்சியாக தமிழக மற்றும் ஈழ தமிழ் மக்கள் மீது பகை வெறியை வெளிப்படுத்தி வரும் சுப்பிரமணிய சுவாமியின் வருகையை எதிர்த்து ஈழத் தமிழர்களும் மற்றும் தமிழ் நாட்டுத் தமிழர்களும் கடும் குளிரையும் பொருட்படுத்தாமல் மண்டபத்துக்கு வெளியே அவரின் வருகைக்கு எதிரான ஆர்ப்பாட்ட போராட்டத்தினை நடத்தினார்கள். தான் பாராளுமன்ற உறுப்பினர் என்கிற அடிப்படையில் நிகழ்விற்கு அழைக்கப்பட்டதாகவும் சுப்பிரமணிய சாமியுடன் பேசவில்லை என்றும், புகைப்படம் கூட எடுக்கவில்லை என்று கூறுகிறார். தன் மீது திட்டமிட்டே களங்கம் கற்பிக்கப்படுவதாக கூறுகிறார். இதற்கு முன்னர் கனடாவிற்கு வந்திருந்த சுப்பிரமணிய சுவாமியை தான் சந்திக்கவில்லையென்றும் அதில் வெளிவந்த புகைப்படம் தான் இல்லையென்றும் பல பொய்களை சொல்லி வந்தார். லோகன் - சுவாமி சந்திப்பு, புகைப்படங்கள் வெளியில் வந்த போது, விழுந்தாலும் மீசையில் மண் படவில்லையென்ற கதையாக திரும்ப இந்த வீடியோவை வெளியிட்டார். தான் அந்த நிகழ்விற்கு போனனேன். ஆனால் சுவாமியோடு பேசவில்லையென்று கூறியிருக்கிறார் ஆனால், இந்தப் புதிய வீடியோவில் நெடுநாள் சாப்பிடாமல் இருப்பவர்கள் பசிக்கு உணவை நோக்கி அலைபாய்வது போல, சுவாமிக்கு கை கொடுத்து பேசியதை பார்க்கும் போது லோகன் பொய்கள் வருங்காலத்தில் எங்கும் எடுபடாது என்று தெரிகிறது. இதற்கு, மக்களை ஏமாற்றி பொய் சொல்லும் தமிழ் அரசியல்வாதிகளை நிரந்தரமாக வீட்டிற்கு அனுப்பி வைக்க வேண்டும் என்று சமூக ஊடகங்களில் பலரும் கருத்து தெரிவித்து வருகின்றனர்.